நூல்களை இவர் இவ்வாறு பயின்று தெளிந்தமை அரிதரிது!'' எனப்புகன்று, அங்ஙனந் தாம் பாராட்டியதற்கு அடையாளமாக ஒரு நற்சான்று இதழும் எழுதித் தந்தனர்.

திரும்பவும் 1896-ஆம் ஆண்டில் சுந்தரம்பிள்ளை யவர்கள் இவரைத் திருவனந்தபுரத்திற்கு அழைத்து, அப்போது மார்த் தாண்டன் தம்பி என்பவரால் வைத்து நடத்தப்பட்ட ஓர் ஆங்கி லக் கல்விக்கழகத்தில் இவரைத் தமிழாசிரியராக அமர்த்திவைத் தனர். திருவனந்தபுர நகரம் அக்காலத்தில் உடம்பின் நலம் பேணுதற்கேற்ற ஒழுங்குகள் அமையப்பெறு திருந்தமையால், இரண்டரைத் திங்கள்மட்டுமே இவர் அங்கிருந்து, பின்னர் அவ் வலுவலை விட்டு நாகபட்டினந் திரும்பினர். இவர் திருவனந்த புரத்தில் இருந்த இரண்டரைத் திங்களும், அந்நகரத்துச் சைவர் கள் வைத்து நடத்திய சைவசித்தாந்தசபைக ளிரண்டிற் 'சைவ சித்தாந்த உண்மைகளைப்' பற்றிய விரிவுரைகளை இடையிடை யே நிகழ்த்திவந்தனர். இவர் செய்த அவ்விரிவுரைகள் அந்நகரத் திருந்த சைவ நன்மக்களாற் பெரிதுங் கொண்டாடப்பட்டன. அப்போது திருவனந்தபுர அரசர்கல்லூரியில் 'நாடகத் தமிழைப்' பற்றி ஒரு விரிவுரை செய்யும்படி சுந்தரம்பிள்ளை யவர்கள் கேட் டுக்கொள்ள, அதற்கிசைந்து 1896-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 12-ஆம் நாள் இவர் 'நாடகத்தமிழ்' என்பதனைப் பொரு ளாகக்கொண்டு, மிக ஆராய்ந்து கண்டதோர் அரியவிரிவுரையினை நிகழ்த்தினர். அவ் விரிவுரை நிகழ்ந்த அவையில் சுந்தரம்பிள்ளை யவர்களே அவைத்தலைவரா யிருந்து, இவர் செய்த விரிவுரை யின் அருமையை மிகவும் வியந்துபேசினர். அவ் அவையிற் குழுமியிருந்த பெருங்கூட்டத்தவர் எல்லாரும் அதனைப் பெரி தும் பாராட்டினர். அப்போது இவர்க்கு ஆண்டு இருபது. அவ் வாண்டின் கடைசியில் இவர் நாகைக்குத் திரும்பினர்.

இதற்குமுன் இவர் நாகையிற் கல்வி பயின்றுவருங் காலத் தில், நாகை வெளிப்பாளையஞ் சைவசித்தாந்த சபையார், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயக ரவர்களைச் சென்னையினின்றும் இடையிடை யே வருவித்து அவராற் சைவசித்தாந்த அரும்பொருள் விரி வுரைகள் நடப்பித்து வந்தனர். நாயகரவர்கள் நிகழ்த்திய அவ்

விரிவுரைகளை இளைஞராயிருந்த மறைமலையடிகள் ஆவலோடுஞ் சென்றுகேட்டு, அப்பொருள்கள் முழுமையுங் கேட்டபடியே மனத்தமைத்துச் சைவசித்தாந்த வுண்மை தெளிந்து, அதற்கு முன் தாம் பயின்றுவந்த 'மாயாவாத வேதாந்தம்' பொருந்தாமை கண்டு அதனை அறவே கைவிட்டுச், சைவசித்தாந்த வுண்மைக்கே உழைக்குங் கடப்பாடு மேற்கொண்டு அதன்கண் விருப்பம் மீதூரப் பெற்றார். அவ்வாண்டில் நாகையில் நடைபெற்ற 'ஸஜ்ஜனப்பத்திரிகா' என்னுங் கிழமைத்தாள் ஒன்றில் மாயாவாதி ஒருவர், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள் எழுதிய சிலவற்றை மறுத்து எழுதிவந்தார். அம் மறுப்பினைக்கண்ட மறைமலையடிகள், நாயகரவர்கள் எழுதியவைகளே பொருத்தமுடையன வாதலும், அம்மாயாவாதி எழுதியவை பொருத்தமிலவாதலும் நன்கெடுத்துக்காட்டி 'நாகை நீலலோசனியில்' தொடர்பாகப் பல கட்டுரைகள் வரைந்து, 'முருகவேள்' என்று கைச்சாத்திட்டு வெளிவிட்டார். அக்கட்டுரைகளை நோக்கினரெல்லாம் அவை தம்மை வரைந்த இவர்தம் ஆராய்ச்சி யறிவின் திறத்தையுங் கல்வியறிவின் ஆழத்தையுங் கட்டுரை எழுதும் ஆற்றலையும் மிகுதியும் வியந்து கொண்டாடினர். இக்கட்டுரைகளைச் சென்னையிலிருந்த நாயகரவர்கள் பார்க்க நேர்ந்தபோது, அவற்றின் திறத்தை வியந்து அவற்றை வரைந்த 'முருகவேள்' என்பார் யார்? என்று நாகை வெளிப்பாளையம் சைவசித்தாந்த சபையார்க்கு ஒருகடிதம் எழுதிக் கேட்டனர். அச்சபையாருட் பெருமுயற்சியுடையவரும், மறைமலையடிகட்கு இளமைதொட்டுச் சிறந்த நண்பருமான திரு மதுரைநாயகம் பிள்ளை யென்பவர் அடிகளின் வரலாறுகளை நாயகரவர்கட்கு உடனே எழுதித் தெரிவித்தனர். நாயகரவர்களும் அடிகளைப் பார்க்கும் விருப்பம் மிக்குத், தாம் அடுத்து நாகைக்கு வருகையில், இவரைத் தம்பால் அழைத்துவரும்படி அவர்க்கு அறிவித்தார். அறிவித்த சில திங்களிலெல்லாம் நாயகரவர்கள் வெளிப்பாளையம் வர, இவரும் அவரைச் சென்றுகண்டார். நாயகரவர்கள் இவரை யாராய்ந்து பார்த்து இவரைத் தம் புதல்வர்போற்கருதி அன்பு பாராட்டி வரலானார். நாயகரவர்கள் சென்னைக்குத் திரும்புங்காலையில்,

"உன்னை விரைவிற் சென்னைக்கு வருவிப்போம்; நீ அந்தப் பக்கங்களில் இருந்தாற்றான் நலமுண்டாம்" என்று இவரைநோக்கிக் கூறிச்சென்றார்கள். அவர்கள் அங்கே சென்றபின் இவர்க்கு அன்பான கடிதங்கள் எழுதிவர, இவரும் அவரைத் தம்ஆசிரியருந் தந்தையும்போல் எண்ணி அவர்பால் மிகுந்த அன்புபூண்டு கடிதங்கள் எழுதிவரலானார்.

இந்நாட்களின் இடையில், நாயகரவர்கள் இவர்க்குள்ள சைவசித்தாந்த நுட்பவறிவைப் பயன்படுத்தக் கருதிச், சீகாழிச் சிற்றம்பல நாடிகள் அருளிச்செய்த 'துகளறுபோதம்' என்னும் நூலை இவர்பால் விடுத்து, அதற்கோர் உரையெழுதுமாறு தூண்டினர். அதற்கிசைந்து இவர் அந்நூலின் நூறு செய்யுட்களுக்கும் விழுமியவோர் அருந்தமிழுரை வரைந்து அதனை நாயகரவர்கள்பாற்போக்க, அவர்கள் அவ்வுரையின் நுட்பத்தையுஞ், சித்தாந்தத் தெளிவையும்,சொற்சுவை பொருட்சுவைகளையும் உற்று நோக்கி, "இவ்வுரை சிவஞானமுனிவர் உரையோடு ஒப்பது" என்று வியந்துபேசி, அதனைத் தமது செலவிலேயே அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். இவர் அக்காலத்தே மாயாவாத மறுப்பாக 'நாகை நீலலோசனி'யில் எழுதின கட்டுரைகளிற் சில, நாயகரவர்கள் செலவில் இவர் 1899-ஆம் ஆண்டு வெளியிட்ட 'சித்தாந்தஞானபோதம்' முதற்புத்தகத்தின் கஉ0-ஆம் பக்கம் முதல் அதன் முடிவுவரையில் அச்சிடப்பட் டிருக்கின்றன. இன்னும் அக்காலத்தே சென்னையிலிருந்த மாயாவாதி ஒருவர், தெய்வத் திருவள்ளுவர் அருளிச்செய்த 'திருக்குறளின்' முதற் செய்யுளை மாயாவாதக் கொள்கையின்பாற் படுத்தி 'முதற்குறள் வாதம்'எனப் பெயரிய ஒரு புத்தகம் எழுதிவிடுப்ப,இவர் அதற்கு மறுப்பாக 'முதற்குறள்வாத நிராகரணம்' எனப் பெயர்அமைத்த நூலொன்றை வெளியிட்டார். இவ்வளவும் இவர் நாகபட்டினத்திலிருந்த ஞான்று எழுதியவைகளாகும். அப்போதிவர்க்கு ஆண்டு இருபதரை.

இனி, நாயகரவர்கள் இவரை நாகையிற் கண்டு அளவளாவிச் சென்றதுமுதல் இவரைச் சென்னைக்கு வருவிப்பதிற் கருத்து மிகலானார். அஞ்ஞான்றுதான், நாயகரவர்கள்பாற் சைவ

சித்தாந்தமுணர்ந்த திரு நல்லசாமிப்பிள்ளை என்பவர் 'சிவஞான போதம்' என்னும் ஒப்புயர்வற்ற விழுமிய சைவசித்தாந்த முதல் நூலை ஆங்கிலமொழியில் மொழிபெயர்த்து வெளிப் படுத்தினர். அதனை வெளிப்படுத்தியபின், சைவசித்தாந்த உண்மைகளை நன்கு பரவச்செய்தற் பொருட்டு அவர் 'சித்தாந்ததீபிகை' அல்லது 'உண்மைவிளக்கம்' எனப் பெயர்வாய்ந்த ஒரு திங்கள் இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடத்தக்கருதி, அதனைத் தம்மோடு உடனிருந்து நடத்தத்தக்கார் எவர் என்று ஆராய்கையில், நாயகரவர்கள் 'இவரே அதுசெய்யவல்லார்' என்று மறைமலையடிகளைச் சுட்டிக்காட்டி, இவரைத் தம்பாற் சென்னைக்கு வருவித்தனர். அப்போது நல்லசாமிப்பிள்ளை யென்பார் சிற்றூரில் வழக்குத்தீர்க்கும் மன்றத்தில் நடுவராய் (Judge) அலுவல் பார்த்து வந்தனர். அவர் நாயகரவர்கள் கட்டளைப்படி உடனே சென்னைக்கு வந்து இவரது கல்வியறிவினையும் இயற்கையறிவினையுந் தாமும் ஆராய்ந்து பார்த்து வியந்து, தம்மோடு இவரைச் சிற்றூர்க்கு அழைத்துச் சென்றனர். இவரது உதவிகொண்டு, 'சித்தாந்த தீபிகை' எனப் பெயரிய திங்கள் இதழ் தமிழ்ப்பதிப்பின் முதல் இலக்கம் 1897-ஆம் ஆண்டு, சூன் திங்கள், 21-ஆம் நாள் வெளிப்படுத்தப் பட்டது. அதன் முதல் ஐந்து இலக்கங்களுக்கே இவர் ஆசிரியராயிருந்து எழுதிவந்தனர். 'திருமந்திரத்' திலுள்ள அன்புடைமை, இரந்தார்க்கீதல், அறஞ்செயான்றிறம் என்னும் மூன்றியல் முப்பது பாட்டுகளுக்கும்; 'சிவஞானசித்தியார்' அளவையியல் காப்புச் செய்யுளொடு பதினொன்கு செய்யுட்களுக்கும்; 'தாயுமானசுவாமிகள் பாடல்' பரிபூரணானந்த போதம் பத்துச்செய்யுட்களுக்கும், பொருள்வணக்கம் எட்டுச் செய்யுட்களுக்கும் எழுதிய விரிவுரைகளுங், 'குறிஞ்சிப்பாட்டை' பற்றி எழுதிய உரையும், 'அன்பு,' 'அருள்' என்பவற்றைப் பொருளாகக் கொண்ட கட்டுரைகளும், ஆங்கிலத்தினின்று மொழிபெயர்த்து வரைந்த நான்கு செய்யுட்களும் 'மூன்றுகனவு' என்பதும் வேறு சில குறிப்புகளும் அப்போது இவரால் இயற்றப்பட்டு, அச் 'சித்தாந்தீபிகை' முதல் மூன்றிலக்கங்களில் வெளிப்படுத்தப் பட்டனவாகும். மேற்குறித்த நூல்களுக்கு இவரெழுதிய விரிவுரை

களும், மற்றைக் கட்டுரைகளும், மறைமலையடிகள் புத்திளஞ்மைக் காலத்திலேயே எய்திய அரும்பெறற் கல்விப் புலமையினையும் ஆழ்ந்தஅறிவின் றிறத்தையும் விளங்கக் காட்டும் போனட யாளங்களாய் நிற்கின்றன. இவ்வளவும் இவர் சிற்றூர்க்குச் சென்றவ்வரையில் நிகழ்ந்தவரலாரும். இத்துணையே இந்நூலின் உரைக் குறிப்புகளுக்கு வேண்டுவ தாகையால், மேல்நிகழ்ந்த இவரது வரலாற்றினை ஈண்டுக் கூருதுவிடுகின்ரும்.

இவர் சிற்றூரிற் சென்றிருந்தபோது இவர்க்கு ஆண்டு இருபது நிரம்பி ஒன்பதுதிங்கள் மேல்ஆயின. ஆகையாற் கட்டுரையில் இருபதாண்டென்றது ஒரு குத்து மதிப்பேயாம்.

பக்கம், க,வரி கந: நெகிழப் பெருத-விட்டுநீங்கப் பெருத. கக: இங்கே 'செல்வர்' என்றது சிவஞானபோதத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த நல்லசாமிப்பிள்ளை யென்பாரை. இல்லம்-வீடு. உக: ஒருங்கு இருந்து-ஒன்று சேர்ந்திருந்து. உஉ: அளவளாய்-மனங்கலந்து.

பக். உ, வரி ரு: வியந்து-பாராட்டி. சு: விழைவு-மிகுந்த விருப்பம். கூ, க0: நட்பு-நேசம்; கெழுதகைமை-உரிமை. கக: விழுப்பம்-சிறப்பு. கஉ: எய்தும்-அடையும்;பேறு-செல்வம்; பிறிதொன்று மற்ருென்று. கரு: உண்டுகொல்-உண்டோ. கஅ:புலரிக்காலை-விடியற்காலம். உகூ: மிழற்றல்-பாடுதல்.

பக். ந. வரி,க: அரவம்-ஒலி. எ: வைகறை-விடியற்காலம். இப்பக்கம் முற்றிலுஞ் சிற்றூர்க்கு வெளியேயுள்ள நில அமைப்பின் அழகு அங்குள்ளபடியே எடுத்துச் சொல்லப்படுகின்றது. உள்ளவற்றை உள்ளபடியே யெடுத்து அழகுபடுத்திச் சொல்வதே நல்லிசைப்புலமையாகும். ஓரிடத்தை அழகுபயப்பச் சொல்லுங்கால் அங்குள்ள உண்மைக்கு மாருகத் தம் மனம் போனபடி யெல்லாம் எழுதும் பிற்காலத்துத் தமிழ்ப்புலவரின் செய்யுள்வழக்குச் சிறிதும் விரும்பத்தக்கதன்று. 'பத்துப் பாட்டு,' 'கலித்தொகை,' 'புறநானூறு' முதலான பழைய சங்கத் தமிழ் நூல்களிற் போந்த பாட்டுகளெல்லாம் உள்ளவற்றை உள்ளவாறே எடுத்துப்பாடும் விழுப்பம் வாய்ந்தனவா யிருத்தல் பெரிதும் பாராட்டற்பாலதாகும்.

வரி, கூ: புறம்பே-வெளியே. க0: மனவெழுச்சி-உள்ளக் கிளர்ச்சி. கந: அடர்ந்த-நெருங்கின; 'தோப்பு' என்பது ஒரே வகையான பரிய மரங்கள் அடர்ந்திருப்பது; கூட்டம் என்ப் பொருள்படும். 'தொகுப்பு' எனுஞ் சொல் தோப்பு என்று ஆயிற்று. கசு: வெட்டவெளி-நடுவே மறைப்பாக ஏதொரு பொருளும் இன்றி வெறும்பரப்பாயிருப்பது; 'வெட்ட,' 'வெளி' என்னும் இரண்டு சொற்களும் 'வெள்' என்னும் முதனிலையிற் பிறந்தனவாகும். கஅ: கான்யாறு-காட்டாறு. உ0: ஆண்டு ஆண்டு-அவ்வவ்விடத்தே. உக: 'முருடு' என்னுஞ்சொல் இக்காலத்தே 'முரடு' எனவழங்குகின்றது. உஉ:வேனிற்காலம்-வெயிற்காலம், அது சித்திரைமுதல் ஆடித்திங்கள் ஈறாக நிகழ்வது. உச: அகழ்ந்த-தோண்டிய.

பக். ச. வரி, உ: பூட்டை-இராட்டினம். கஅ: பயக்கும்-உண்டாக்கும். கசு: ஆர் உயிர்-உடம்பில் நிறைந்த உயிர், அரிய உயிர் எனலும் ஆம். உந: புட்கள்-பறவைகள். உச: 'நாகணவாய்ப்பறவையை' இக்காலத்தார் 'நாரத்தம்பிள்ளை' எனவும் 'மைனா' எனவுங் கூறுவர். உரு: தொகுதி-கூட்டம்.

பக். ரு. வரி, உ: நாயுருவிப்பூண்டின்வேர் பல்துலக்குவதற்கு மிகவும் ஏற்றதென்பர். ச: திரளை-திரண்டபொருள். கூ: பொதிந்து-திணித்து: உள்ளடக்கி; எ: 'அறிவுறுத்தல்' அறிவிற் பதித்தல்.

உலக இயற்கையிலுள்ள நலங்களை முதலிற் கண்ணினாற் கண்டு பிறகு அறிவினால் எண்ணிப் பாராட்டல்வேண்டும். கண்ணினாற் காண்பதற்கோ பகலவனது ஒளி கட்டாயம் வேண்டியிருக்கின்றது. ஒளியைத் தருவதொடு, நிலத்தின் கண் உள்ள புற்பூண்டுகள் மரஞ் செடி கொடிகள், பறவைகள், விலங்குகள், மக்கள் என்னும் எல்லா உயிர்களின் வளர்ச்சிக்கும் அவற்றின் அழகிய நிறங்களுக்கும் அப்பகலவன் வெளிச்சமே ஏதுவாயிருக்கின்றது. எனவே, உலகத்தின்கட் காணப்படும் எல்லா நலங்களும் ஞாயிற்றிலிருந்தே உண்டாகின்றன. ஆதலால், அகன்று எல்லையறியப்படாத உலகின் நலங்கள் எல்லாவற்றையும் ஒருங்கே ஒருகாலத்து உணரமாட்டாத சிற்றறிவினராய

மக்கள், ஒருகாலத்து ஒருங்கு காணப்படும் ஞாயிற்றினைக் கண்ட வளவானே அதன்கண் அவ்வெல்லா நலங்களையும் எளிதில் உணரப் பெறுகின்றனர். இவ்வுண்மையினைத் தெரிக்கும் பொருட்டே ஞாயிற்றினுக்கு ஒரு பொற்குடத்தை உவமை யாக்கி, உலக வியற்கையின் நலங்களை அக்குடத்தினுட் பெய்த பண்டங்களாக்கி உரைத்தார்.

கக: கவிந்து-மூடி. மழுக்கி-மங்கச் செய்து. கண்ணறிவு நிகழப் பெறுதார்க்கு மனவறிவு மிகக்குறுகுதல் குருடர் மாட் டுக் கண்டு கொள்க.

இருள் மிக விரிந்தபரப்பு உடையதாயினும், ஓரிடத்துச் சிறிதாய்த் தோன்றும் ஒரு விளக்கொளியால் அது மறைந் தொழிதலுக்கு, அறிவொளியால் மன இருள் மாய்தலை உவமை காட்டினர். இருள் கருநிறத்ததாகலின் அதனைப் போக்கும் ஞாயிற்றினை வெண்ணிறக் கதிர்களென்னுந் தீம்பால் பெய்த ஒரு பொற்குடமாக உருவகப் படுத்தினர்; மேலும், அப் பொற் குடம், இந்நிலவுலகத்துப் பொற்குடம்போல் தன்னுட் பெய்த தனை மறைக்கும் இயல்பிற் றன்றி, மற்றுப் பளிங்குக் குடம் போற் றன்னுட் பொதிந்ததனை வெளியே தெளிவுறக் காட்டும் இயல்பிற்றென்றும், நாற்புறத்தும் பாயும் அதன் வெள்ளிய கதிர் கள் அக்குடத்தின் எப்பக்கத்துந் தோன்றும் பாலொளியி னொழுக்குப் போல்வனவாமென்றுங் குறிப்பிட்டார். அங்ஙனம் பாயுங் கதிர்கள் நீண்ட கம்பி வடிவத்தானும் இருளைச்சிதைக்குந் தொழிலானும், யானை, கல்யானை முதலிய விலங்கினங்கள்மேற் பாயும் அம்புகள் போறலின், பின்னர் அவற்றைக் கணைகளாக வும் உருவகப்படுத்தினர். அதன் பிற், புறத்தே தோன்றும் ஞாயிறு புறத்திருளை நீக்கிக் கண்ணைவிளக்கி, அம்முகத்தால் அகத்தே பாவிய இருளையும் போக்கி மனவறிவை விளக்குதல் குறித்தார். எல்லைகாணப்படுஞ் சிறுவடிவிற் றாகிய ஞாயிறே புற விருள் அகவிருள் இரண்டையும் போக்கிப், புறக்கண் அகக்கண் இரண்டையும் விளக்கவல்லதாயின், எல்லை காணப்படாத இறை வனது அருளொளி நம் உள்ளத்தில் எழுங்கால் அஃது அங் குள்ள அறியாமையை முற்றும் நீக்குமென்பதுங் காட்டினர்.

கரு: அமிழ்தம்-பால். கஎ: கதிர்கள்-ஒளிக்கம்பிகள். கஅ: கணைகள்-அம்புகள். ககூ: கட்புலன்-கண் அறிவு. உரு: வியத்தகும்-பாராட்டத்தகும்.

பக். ரு: வரி, உ: அளப்பு அரிது-அளந்து சொல்லுதல் அரிது. ரு: சூறை-சுழல்காற்று. க0: திரிபு-நிலைமாறல். கஎ: இயக்கம்-நடமாட்டம்.

மக்கள் வாழ்க்கையின் நிலையாமைக்கு வான் நிழலும், உயிர் உடம்பில் நிற்கும் நிலைக்குக் கனவும் உவமைகளாகச் சொல்லப்பட்டன. உயரத்தில் உலவும் வானம் ஓயாமற் காற்றால்உந்தப் பட்டு ஓடிக்கொண்டேயிருத்தலின், கீழே நிலத்தின்மேற் படும் அதன் நிழலும் ஓரிடத்தும் நிலைபெறாமல் ஓடிக்கொண்டேயிருக்கின்றது; அதுபோலவே மக்கள் வாழ்க்கையும் நிலைபெறாமல் விரைந்து சென்று மறைந்து போகின்றது. இனி, நேற்றுக் கண்ட கனவு கண்ட அப்பொழுதே மறைந்துபோதல் போலவும், அது திரும்பத் தோன்றி இன்று காணுங் கனவொடு தொடர்புபட்டு நிகழாமை போலவும், ஒரு நேரத்தில் ஒருடம்பில் நின்ற உயிர், நின்ற அந் நேரத்திலேயே அதனை விட்டுப் போதலும், திரும்ப அதன்கண்வந்து புகுந்து தொடர்புற நில்லாமையும் கண்டுகொள்க. இப்பகுதி முதல்நூலிலிருந்தே மொழி பெயர்த்துரைக்கப்பட்ட தாகும்.

உஎ-ஆவது வரிமுதல் அடிசன் எழுதிய கட்டுரை நேரே மொழிபெயர்த் துரைக்கப் படுகின்றது. உஅ: மலைக்குவடு-மலையுச்சி.

பக். எ. உ: ஆடை-போர்வை. ரு: நண்பகல்-நடுப்பகல், 'நள்' என்பது நண் எனத் திரிந்தது. எ: இளமரக்கா-முற்றாத மரங்கள் உள்ள சோலை. கூ: வேய்-மூங்கில். க0: சிலிர் சிலிர்பு-மயிர்க் கூர்ச் செறிதல்; புல்லாங் குழல் இசைகேட்கும் இன்பத்தால் மயிர் சிலிர்க்கும். கஉ: கன்னல்-கரும்பின் சாறு. கரு: இம்மைப் பிறவி-இப்போதுள்ளபிறப்பு. கஎ: நுகருதல்-உண்ணல். கஅ: துறக்கம்-மேல் உள்ள இன்ப உலகம்; துய்த்த-நுகர்ந்த. ககூ: அரம்பைமாதர்-துறக்கவுலகத்தில் உள்ள அழகிய மாதர். உ0:

எழில்-அழகு. உக: இசைக்கருவிகளாவன: யாழ் குழல் தாளம் முழவு முதலியன; தீவிய-இனிய.

இப் பிறவியி லிருந்தகாலத்து நல்வினை தீவினைகளைச் செய்தோர், இவ்வுடம்பை விட்டபின்னும் ஆவிவடிவில் இந் நில வுலகத்திற் கருகே இயங்குதலுண்டு. இது 'மரணத்தின்பின் மனிதர் நிலை' என்னும் நூலிற் கண்டுகொள்க.

பக். அ. வரி, ந: உரையாடினால்-பேசினால். அ: இசைத்த-ஒலிப்பித்த. கo: முறுவலித்து-புன்சிரிப்புக் கொண்டு. கக: நல் உரை-நற்சொல்; கஉ: கூறி-சொல்லி. கந: வெருட்டி-வெருளச் செய்து துரத்தி. உo: கீழ்ப்பால்-கிழக்குத்திசை. உஉ: பள்ளத் தாக்கு-மலைகளின் இடையே அமைந்திருக்குங் குழிந்தநிலம். உந: ஒழுகுவது-ஓடுவது.

மக்கள் வாழ்க்கையின் இயல்புகளை அப்பள்ளத்தாக்கிற் காணப்படுங் காட்சிகளொடு பொருந்த வைத்துக் காட்டுகின்றார். உரு: துன்பவேலி-துன்பங்களுக்கு இருப்பிடம். மக்கள் வாழ்க் கையில் வருந்துன்பங்கள் ஒரு பெரும்பள்ளத்தாக்காகவும், அத் துன்பங்கள் எல்லாம் நேற்று இன்று நாளை என்னுங் கால ஓட்டத்தைப்பற்றி நிகழ்தலின் அக்கால ஓட்டம் அப்பள்ளத் தாக்கினூடு சுருண்டு ஓடும் ஒரு நீர்ப்பெருக்காகவும், உலகத்தின் தொடக்கமும் அதன்முடிவும் எவரானும் அறியப் படாமையின், அவ்விரண்டும் அந்நீர்ப்பெருக்கில் இருண்டு தோன்றும் இரண்டு முனைகளாகவும், இக் காலப்பெருக்கின் இடையே தோன்றிய நம் மக்கட்பிறவியின் வாழ்நாள் அந்நீர்ப் பெருக்கின் நடுவே காணப்படும் ஒரு பாலமாகவும், மக்கள் வாழ்க்கைக்கு வரை யறுக்கப்பட்ட நூறு ஆண்டுகளும் அப்பாலத்தில் அமைந்த நூறு கண்களாகவும், அவரவர் தந் தகாச் செயல்களால் நூறாண்டு நிறைதற்கு முன் எழுபதாண்டுக்குள் இறந்துபோதலின், மற்றை முப்பதாண்டுகளும் அப் பாலத்தில் உடைந்துபோன கண்களாகவும் உருவகப்படுத்திச் சொல்லப்பட்டன.

பக். கூ. வரி, உ: திணிந்த-நெருங்கிய. ந: ஏது-இயைபு, காரணம்; 'ஏதிலார்' என்னும் பழைய தமிழ்ச்சொல் 'இயைபு இல்லார்' எனப் பொருள்தருதலின் இதனை வடசொல் லென்-

றல் பொருந்தாது; ஏது என்னுந் தமிழ்ச்சொல்லே 'ஹேது' எனத்திரித்து வடநூலாரால் வழங்கப்பட்டது. வினவினேன்- கேட்டேன். ௯: வரையறுக்கப்படும்-எல்லை கட்டப்படும்; பகுதி- பங்கு. ௧௯: வாணுள்-வாழ்நாள். நோக்குதல்-உன்னிப்பாய்ப் பார்த்தல். ௧௭: நுறுங்குதல்-நொறுங்குதல்: பொடிபடுதல். ௧௮: மொத்தம்-தொகை. ௨௧: இறைவன் முதன் முதல் மக்களைப் படைத்தகாலையில் அவர்க்கு ஆயிரம் ஆண்டு வாழ்நாள் அமைத்தானென்பது விவிலியநூல் வழக்கு.

பக். ௧௦. வரி, ௭: வாழ்நாள் என்கின்ற பாலத்தின் இடையிடையே பொருத்தப்பட்ட கள்ளக் கதவுகளாக உருவகப் படுத்தப்பட்டவை, மக்கள் தம் பொருந்தாச் செயல்களால் வருவித்துக்கொள்ளும் நோய்களேயாகும். காலம்முதிரா முன்னரே இறந்தொழிவதற்கு இந்நோய்களே ஏதுவாக இருத்தலால், மக்கள்சடுதியிற்றவறிக் கீழே வெள்ளத்தில் வீழ்தற்கு வாயிலாய்அப் பாலத்தில் அமைக்கப்பட்ட கள்ளக் கதவுகளாக இவை தம்மை உருவகப்படுத்திஞர். அப்பாலத்தின் முதன் முனையில் தொங்குங் கரியவானம் வாழ்நாள் துவக்கத்திற்கு ஓர் அடையாளமாகலின், அதனைக் குழந்தைப் பொழுதிலேயணுகிய மக்கள், தாய் தந்தையர் வழிவந்த பல்வகை நோய்களாற் பற்றப்பட்டு இறந்தொழிலைத் தெரித்தற் பொருட்டு அங்கே அக் கள்ளப் படுகுழிகள் பற்பல உள என்ருர். ௧௯: நுழைவாயில்—உட்புகும் இடம். ௧௬:பாலத்தின் நடு வென்றது மக்கள் வாழ்நாளின் நடுப்பகுதி, அது முப்பத்தைந்து முதல் நாற்பத்தைந்து ஆண்டு வரையிலுள்ள காலம்; அக்காலத்திற் பெரும்பாலார் இறந்துபடுதலின், அவ் விடத்திற் செல்லச் செல்ல மக்களின் தொகை சுருங்கிவிட்டதென்ருர். ௧௭: அப்பாலத்திற் பழுதுபடாதிருந்த கண்கள் என்றன, நோயில்லாத இளமைக்காலமே யாம்; அக் காலத்தில் மக்கள் தொகைபெருகி யிருத்தலின், முழுமையாயிருந்த கண்களின்மேல் அவரது தொகை மிகுந்ததென்ருர். ௨௦: பழுதுபட்டகண்களென்றன நோயாற் பற்றப்பட்ட காலங்கள்; அக் காலங்களிற் சிறிது உயிர் பிழைத்திருந்தோரும் நாட் செல்லச் செல்ல இறந்துபட்டமை அறிவித்தார்.

பக். ௧௧. வரி, ௭: தெற்றுப்பட்டு-தடைப்பட்டு. ௮-௯: நீர்க் குமிழிகள் என்றன பல்வகைச் சிற்றின்பங்கள். ௧௪: கொடுவாளும் அரிவாளும் ஏந்தி நின்று, வழிவந்தோரை அப் படுகுழிகளிற் புகுத்தி வீழ்த்தினோர், களவு, கட்குடி, சூது, ஊனுண, விலைமாதர். ௨௨: இத்துணை-இவ்வளவு.

பக். ௧௨. வரி, ௪: எருவை-கருடன், பருந்திலொருவகை. ௧௧: ஆடவன்-ஆண்மகன். ௧௩: கூற்றுவன்-உயிரை உடலினின்றுங் கூறுபடுத்தும் ஒரு தெய்வம். ௧௯: தருதல்மாலைத்து-தருதலை இயல்பாக உடையது. ௨௦: தன் அகத்தே-தன்னுள்ளே. ௨௨: செறிவு-நிறைவு; ஒருமிக்கும்-ஒன்றுகூடும். ௨௭: குழாம்-கூட்டம். ௨௮: சேய்மை-தூரம்.

பக். ௧௩. வரி, ௪: படுகர்-பள்ளம். ௫: புயல்-மேகம்; செறிந்து-நெருங்கி. ௯: குடா-வளைந்த நீர்நிலை. ௧௦: இடைஒழுகும்-நடுவேயோடும். ௧௧: நறு-நல்ல மணம். ௧௩: மருங்கு-பக்கம். ௧௪: கொழுவிய-செழுமையான; தளிமம்-படுக்கை. ௧௭: ஆர்ப்பு-ஒலி; விரசிய-கலந்த. ௧௯: துளும்புதல்-வழியும்படி நிறைதல். ௨௩: வாயிலாக-வழியாக. ௨௫-௨௬: புத்தப்புதிய-மிகப்புதிய. ௨௬-௨௭: எக்கர்-குவிக்கப்பட்ட மணல்மேடு.

பக். ௧௪. வரி, ௩: அறம் வழுவாது-தருமத்தினின்றுந் தவறாது. ௫: உறையுள்-தங்கும் இடம். ௭: ஏற்றம்-மேன்மை; இணங்க-இசைய; பலதிறப்பட்ட-பல வகைப்பட்ட. ௯: வசதி-இடத்தின் நன்மை. ௧௨: விடுதி-தங்குமிடம்; பெறற்பாலன-பெறுதற்கு உரியன; இப்பெற்றித்து-இத்தன்மைத்து. ௧௯: கடியல்-கடிதல், நீக்கல். ௨௧: உரைவரம்பு-சொல்லின் அளவு. ௨௨: உவந்து-மகிழ்ந்து.

பக். ௧௫. வரி, ௮: ஆன்நிரை-பசுக்கூட்டம். ௧௩: கவன்று-கவலையுற்று. ௧௯: நிகழ்ந்தன-நடந்தவை, அளவளாய்-அளவளாவிக்கொண்டு.

## படைப்பின் வியத்தகு தோற்றங்கள்

## (Wonders of Creation or The Immensity of the Supreme Being)

அடிசனார் இயற்றிய இவ்வாங்கிலக் கட்டுரையின் மொழி பெயர்ப்பு இருபத்தோராம் பக்கத்தின் முதலிலிருந்து வருகின்றது. அதற்குமுன் இதன் மொழிபெயர்ப் பாசிரியராகிய மறைமலையடிகள் தாம் திருவனந்தபுரஞ் சென்றமையினையும், அங்கே காணப்பட்ட நிலத்தோற்றங்களின் அழகினையும் எடுத்துக் கூறுகின்றார்.

பக். கசு. வரி, ச: கழகம்-கல்விபயிலும் இடம்; அறிவு நூல்-தத்துவசாஸ்திரம், (Philosophy). அப்போது திருவனந்தை அரசர் கல்லூரியில் அறிவுநூலாசிரியராய் அமர்ந்திருந்தவர் திருச் சுந்தரம் பிள்ளையவர்களே யாவர். ரு: உவந்து-விரும்பி. கஉ: ஆக்கம்-பெருக்கம். கசு: பெற்றி-தன்மை. கஎ: புறம்பே-வெளியே. சேய்மை-தொலைவு. கஅ: பொற்றை மலை-மண்மேடாயிருக்கும் மலை. உக: 'குறிஞ்சிநிலம்' என்பது மலையும் மலையடுத்த இடமும் ஆகும். உங: விருந்தோம்பல்-விருந்தினராய் வருவாரைப்பேணல்.

பக். கஎ. வரி, க: ஒருகிழமை-ஒருவாரம். சு-எ: இருபுறத்தும்-இருபக்கத்திலும். கூ: மொழுக்கன்-பெரும்பாலும் மேடு பள்ளமின்றித் தன் வடிவுமுழுதும் மட்டமாயிருப்பது. உஉ: தொகுப்பு-கூட்டம். உங: கான்யாறு-காட்டாறு. உரு: வழுவி-தவறி.

பக். கஅ. வரி, ச: பிணைந்து-இணைந்து, பின்னலுற்று; அடர்ந்திருக்கும்-இலைகள் நெருங்கியிருக்கும். ரு: மேல்கவிந்து-மேலேமூடிக்கொண்டு. சு: துறை-இறங்குமிடம்; தன்னந் தனி-முழுதுந் தனியான தன்மை. எ: செறிந்திருக்கும்-நெருங்கி யிருக்கும். கூ: துவண்டு-வளைந்து. க0: புதர்- தூறு; கக: அண்டை

யில்-பக்கத்தில். கஉ: அரவம்-ஓசை. கரு: அழுங்கி-அழுந்தி. கஅ: ஈரம் துவர்த்தல்-மெல்லிய துணியாற் கூந்தலிற் படிந்த ஈரத்தை எடுத்தல். உகூ: மருங்கில்-பக்கத்தில்.

பக். ககூ: உ-ங சன்னல் பின்னல்-நெருங்கியபின்னல். ஈ: கட்புலனாயின-கண்ணுக்குத் தோன்றின. எ: அளாவி-சேர்ந்து தழாவி. கக: விழுது-கொம்புகளிலிருந்து இறங்கும் வேர். கங: அலகு-பறவை மூக்கு. கச: மேனி-உடம்பின் நிறம்; பேடு-பெண். கரு: கோதி-வகிர்ந்து. கஎ: வளார்-இளஞ் சிறுகொம்பு; சிறுதுயில்-நிரம்பாத் தூக்கம். கஅ: சீழ்க்கை-வாயால் ஊதும் ஒருவகை ஓசை, இக்காலத்தில் இச்சொல் 'சீட்டி' என மருவி வழங்குகின்றது. உ0: கருகல்-கரியநிறம். உக: விலங்கி-குறுக்கிட்டு. உச: மறித்தும்-மறுபடியும்.

பக். உ0. க: 'பத்துப்பாட்டுக்' களில் ஒன்றான குறிஞ்சிப் பாட்டில் அதனாசிரியராகிய கபிலர் குறிஞ்சிநில வனப்புகளைச் செவ்வனே அமைத்துப்பாடி யிருக்கின்றார்; இவர் மற்றைத் தொகைநூல்களிற் பாடியிருக்கும் பாட்டுகளுங் குறிஞ்சிநில வளங்களையே நன்கெடுத்து மொழிதலின், இவர் அந் நிலஇயற்கைகளைக் கண்டுணர்ந்து பாடுவதில் மிகச் சிறந்தவராகக் காணப்படுகின்றார். ஆசிரியர் நக்கீரனாருந் தாம் இயற்றிய திருமுருகாற்றுப் படையிற் குறிஞ்சிநில வளங்களை எடுத்தோதுதல் காண்க. இவ்விருவரைப்போலவே பண்டைக்காலத்துச் செந்தமிழ்ப்புலவர்களெல்லாருந்தாம் கண்ட வளங்களைத் தாங் கண்டபடியாகவே எடுத்துரைக்குந் தன்மையர்; பிற்றைஞான்றைப் புலவர்போல் தம் மனம்போனபடி பாடும் நீர்மையர் அல்லர். ரு: கழிப்பி-கழித்து. ஈ: அருகாமை-அண்மை, அருகு. அ: நோக்கினேற்கு-நோக்கின எனக்கு; இவ்வரியிலிருந்து அடிசனாது கட்டுரை மொழிபெயர்த் துரைக்கப்படுதல் காண்க. கூ: சுடர்க்கொழுந்து-ஒளியின்கொடி; திகழும்-விளங்கும். க0-கக: நிறந்தோய்ச்சல்-நிறங்கள் ஒன்றோடொன்று கலந்து காணப்படல். கஉ: செக்கர் வானம் - செவ்வானம். கங: வான்மீன்கள் - நட்சத்திரங்கள்; கோள்கள் - கிரகங்கள். கஅ: கதிர் - ஒளிக்கம்பி; திணிந்து-நெருங்கி. ககூ: மீன்தொகுதிகள்-நட்சத்திரக்கூட்டங்கள், மின்

னுதலின் அவை 'மீன்' எனப் பெயர்பெற்றன; நீர்வாழ் உயிர்களில் ஒரு சாரனவும் மின்னுதல் பற்றியே 'மீன்' எனப்பட்டன; இத்தமிழ்ச்சொல்லே வடமொழியிற்சென்று 'மீனம்' என வழங்குகின்றது. ௨௨: நளிஅமிழ்தம்-குளிர்ந்தபால்; முழுமதியம்-முழுநிலா. ௨௩: முகிற்குழாம்-மேகக்கூட்டம். ௨௪: ஞாயிறு-சூரியன். ௨௫: பிழம்பு-திரட்சி; ஊடே-நடுவே. ௨௬: நேர்த்தி-திருத்தமுள்ளது; தோய்வித்து-கலப்பித்து; வனைந்தான-அழகாய்ச்செய்த. ௨௭: ஓவியம்-சித்திரப்படம்.

பக். ௨௯. ௧: துலங்க-விளங்க. ௩: இயங்குதல்-செல்லல். ௪: சான்றோர்-அறிவானும் நல்லியல்புகளானும் நிறைந்து அமைந்தோர். ௫: இடர்ப்படுத்துவதான-துன்புறுத்துகின்ற. ௬: தொல்லாசிரியர்-பழைய ஆசிரியர்; இங்கே தொல்லாசிரியரென்று அடிசனாற் குறிப்பிடப்பட்டவர் 'டேவிட்' (David) என்பவரேயாவர்; டேவிட் என்பவர் கூறிய கருத்துக்களை மறைமலையடிகள் இங்கே தமிழ்ச்செய்யுளாக்கினர்; அச்செய்யுளின் பொழிப்புரை வருமாறு: "வானமும், வானத்தில் விளங்கும் நிலவும், வான்மீன்களும், ஓ கடவுளே, நின் கைவிரல்களின் வினையால் ஆக்கப்பட்டனவாகு மென்று ஆராய்ந்துபார்க்குங்கால், இவ்வுலகத்தில் இயங்கும் ஆண்மகனும், அவன் பெற்ற தேன்போற்றித்திக்கும் மழலைச்சொற்பேசுஞ் சிறுபிள்ளைகளும் ஒரு பொருளாக விளங்குவரோ!" 'இவ்' என்னுஞ் சுட்டு நீண்டு வகரங் கெட்டு னகரச்சாரியை பெற்று 'ஈன்' என நின்று இவ்வுலகம் எனப் பொருள் தந்தது; இச்சொல் இப்பொருட்டாதல் "ஈனோர்க்கெல்லாம் இடர்கெட இயன்றது" என்புழியுங் காண்க*. ௧௩: உரையிட்டார்-சொன்னார். நங் கட்புலனுக்கு முத்துக்கள்போற் றோன்றுகின்ற வான்மீன் ஒவ்வொன்றும் ஞாயிற்று மண்டிலத்தை ஒப்பனவும் அதனினும் மிகப்பெரியனவும் ஆதல் வான்நூலிற் கண்டுகொள்க. ௧௮: குழாம்-கூட்டம். நமக்குஉரிய ஞாயிற்றுமண்டிலத்தை, நாம் இருக்கும் இந் நிலவுலகமுஞ் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி முதலான மண்டிலங்களுஞ் சுற்றிச் செல்லுதல்போல, வான்மீன்களாகிய

* மணிமேகலை, கச்சிமாநகர்புக்ககாதை, ௩௨.

ஞாயிறு ஒவ்வொன்றனையும் பற்பல கோள்கள் சூழ்ந்து செல்லு தலை வான் நூல்களால் அறிக. உ௩: நிலைக்களன்-தாங்கும் இடம். உ௫: விழுமிய-சிறந்த. உ௬-உ௭: துலக்கப்படும்-விளக்கப்படும்; விளக்கத்தால் ஒளிர்கின்றன-ஒளியினால் விளங்குகின்றன.

பக். உஉ. ௪: அத்துணை-அவ்வளவு; சேய்மை-தொலைவு. ௯: புல்லிய-கீழ்மையான. க௫: துகள்-பொடி. க௭: திண்ணம்-மெய்யுறுதி. க௮: வரம்பு-எல்லை. உக: வெறிய-வெறுமையான..

பக். உ௩. ௫: தொலைவுநோக்கி-Telescope. ௮-௯: ஒளிவிரி சுதிர்-வெளிச்சத்தைப் பரப்பும் ஒளிக்கம்பி. கக: இங்கே 'வான் நூலார் ஒருவர்' என்றது ஹியூஜீனியஸ் (Huygenius) என்பவரை யே யாம். க௩: வரையறுத்தல்-வரம்பு கட்டுதல். க௬: ஆற்றல்-வலிமை. க௭: பரம்பிய-பரவிய. க௮: நிகழ்தல்-நடைபெறுதல். க௯: மனக்கற்பனை-மனத்தால் எண்ணிக்கொள்ளப்பட்டது, உண்மையில் இல்லாதது; எங்ஙனம்-எப்படி; வரையறை-அள வறுத்தல். உ௩: கண்காணிப்பு-மேற்பார்த்தல், (Supervision). உ௫: புரியாநின்ற-செய்கின்ற. உ௬: பெருந்தகை-பெருமை யுடையோன்; என்பு-எலும்பு.

பக். உ௪. உ: பருப்பொருள்-பருமபடியான பொருள்; யாங்கணும்-எவ்விடத்தும். ௩: குழுமி-கூடி. ௪: உயிர்த்தொகை-உயிர்களின் கூட்டம். ௫: கடைக்கண்-கண்ணின் கடைசி; நோக் கம்-உன்னிப்பான பார்வை. ௬: பற்றப்படாத-பிடிக்கப்படாத. ௮: மனமடிவு-மன மடக்கம் அதாவது துயரம். க௫: கருதாது-எண்ணாது. க௭-க௮: சிறுபான்மை-சிறிதுபங்கு. உ௪-உ௫: தகைமை-தன்மை; இசையவே-பொருந்தவே; இயங்கவும்-நடைபெறவும். உ௭: நிலவரைப்பு-நிலப்பகுதி.

பக். உ௫. ௪: உற்றுணர்தல்-கருத்தைப் பதியவைத்து உணர்தல்; தினைத்துணையும்-தினையென்னும் அரிசியின் அள வும். கடவுள் தன்னிடத்தே எவ்வகைப்பட்ட குறைபாடும் இல் லாத முழுமுதற் பொருளாயிருந்தும், குறைபாடு மிகுதியுமுள்ள மக்கள் தமக்குள்ள அக் குறைபாட்டினைக் கடவுளுக்கும் ஏற்றிச் சொல்வது வழக்கமாயிருக்கின்றதென்று ஆசிரியர் அறிவித்தார். குறைவான பொருள் நிறைவானதொன்றை உள்ளபடியாகவே

எண்ணிப்பார்க்க வல்லதன்று; அதற்கும் ஒரு குறைபாட்டை ஏற்றிவைத்தால்தான் அதனை அது கருதவல்லதாகின்றது. ஒருவன் தன்பகைவனோடு எதிர்த்துப் போராடி அவனை வெல்லல் வேண்டினனாயின், அதற்குக் கருவியாக வேல் வாள் கத்தி பரிசை முதலான படைக்கலங்களை ஏந்திச் செல்கின்றான்; அவனுக்கு அக் கருவிகளின்றிப் போராடமாட்டாக் குறைபாடு உண்மையால், அவன்தான் வழிபடுகடவுளரான முருகப்பிரான், சிவபிரான் என்பவரும் வேலும் முத்தலைவேலும் ஏந்திப் போர் புரிபவராகவே வைத்து வழிபாடு ஆற்றுகின்றான்; வேலும் வாளும் இல்லாமற் கடவுள் தான் நினைந்தவளவானே எவற்றையும் அழிக்கவும், அழித்தவற்றைப் பின் ஆக்கவும் வல்லவ னென்று அறிந்திருந்தும், எம்மனோர் அவனை அந் நிலையில் வைத்து வழிபடுகின்றிலர்; இஃது எம்மனோர்க்குள்ள குறைபாட்டினால் ஆயதொன்றாம். இங்ஙனமே ஒவ்வொரு நாட்டிலுள்ளாருந் தத்தமக்குள்ள குறைபாட்டி னியல்புக்கு ஒப்பவே, கடவுளைப் பலதிறப்பட்ட இழிவான வடிவங்களில் வைத்து வணங்குதல் காண்க. கக: மனச்சாய்வு-அறிவுக்கு ஏலாததொன்றனிடத்தே மனம் பற்றிநிற்றல். கஉ: மீண்டும்-திரும்பவும்; முற்ற-முழுதும். கஅ: ஊடுருவி-வியாபித்து; இடையறாது-நடுவே ஓயாது. உசு: இழுக்கு-தாழ்வு, தவறு. உஅ: ஒருங்கால்-ஆராயுங்கால்; கடவுளுக்கு உலகம்முழுதும் ஒருடம்பாகலின் 'இவ்வுலகவுடம்பு' என்றார்.

பக். உசு. க: களைகண் ஆதரவு. உ: இயக்காநிற்கின்றமை-நடத்துகின்றமை; புலன் ஆம்-அறிவுக்குத்தோன்றும், விளங்கும். அறிவுடையதனைச் 'சேதனம்' என்றும், அறிவில்லதனை 'அசேதனம்' என்றும் வடநூலார் கூறுவர்; அறிவுடையன: ஓரறிவுடைய புன்முதல் ஆறறிவுடைய மக்கள் ஈறான உயிர்கள்; அறிவில்லன மண், புனல், அனல், கால், வான் என்னும் ஐம்பெரும் பொருள்களும் அவற்றின் கலப்பாலான இவ்வுலகங்களுமாம். க0: ஒருமித்து-ஒன்றுகூடி. கஉ: பெயர்தல்-ஓரிடத்தைவிட்டுப் பிறிதோரிடத்திற்குச் செல்லல். கச: பரம்பி-பரவி; ஒருபகுதி-ஒருகூறு. கரு-கசு: வரம்பில் ஆற்றல்-எல்லையில்லாத

வல்லமை; கடவுள் ஓரிடத்தில் ஒருகாலத்திலிருக்கும் ஒரு வரம்புட்பட்ட பொருளாயின், அஃது அவ்விடத்தில் அக் காலத்திலிருந்து பிறிதோ ரிடத்திற் பிறிதொரு காலத்திற் போ யிருந்தது எனலாம்; மற்று அஃது எங்கும் எக்காலத்தும் இருப் பதாகலின், அதனை இடம்பெயர்ந்து செல்லும் ஒரு பொருளாக உரைத்தல் இழுக்கென்றார். கக: ஒருவாற்றானும்-ஒருவகையா னும். உ௫: இன்றியமையாது—இல்லாமற்கூடாது, என்பது. 'கட்டாயம்' என்னும் பொருட்டாம். உ௭: தொழிற்கூறுகள்- செயலின்வகைகள்.

பக். உ௭. கடவுள் நுண்ணியவற்றுளெல்லாம் நுண்ணிய ராகலின் அவனை நம்மனோர் தங் கட்புலனாற் காண்டல் இய லாது; கட்புலனாகாத உயிரை அது புகுந்திருக்கும் உடம்பின் வழியே நாங் காண்டல்போலக், கட்புலனாகாப் பேருயிராகிய கடவுளும் இவ்வுலகமாகிய உடம்பின் வழியாகவே காணப்படுவ ரென ஆசிரியர் அறிவித்தார். அ-கூ: உறைவிடம்-இருப்பிடம். க0: கொள்கலம்-பண்டம் பெய்துவைக்கும் பாண்டம். கக: வெள்ளிடை-வெளி. கஉ: அமர்தல்-விரும்பியிருத்தல். கங: பெருங்களம்-பெரிய இடம்; இந்தப் பெருவெளி இறைவனது அருளுணர்வுக்கு இருப்பிடம் என்று கூறியவர் ஸர் ஐசக் நியூ டன் (Sir Isaac Newton) என்னும் ஆங்கிலவானூலாசிரியரே யாவர். க௫: அண்டை-அயல். கசு: இயக்கம்-நடமாட்டம்; ஐம் பொறிகளாவன: மெய், வாய், கண், மூக்குச், செவி என்பன; அவ்வைம்பொறியுணர்வுகளாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. க௭: விலங்குகள்-மிருகங்கள்; மக்களுடம்பு நெடுக்கா யிருக்க, மிருகங்களி னுடம்பு குறுக்கா யிருத்தலின் அவை 'விலங்கு' எனப்பட்டன; விலங்கு—குறுக்கு. கஅ: உன் னிப்பு-கவனிப்பு. உக: கடப்பாடு-கடமை. உச: முற்றுணர்வு- எல்லாம் ஒருங்கேயுணரும் உணர்ச்சி. உஅ: கடுகி-விரைந்து.

பக். உஅ-க: படைப்பு-படைக்கப்பட்ட உலகம். உ: யாண்டு-வருஷம், 'ஆண்டு' எனவுந் திரிந்து வழங்கும்; ஒரு பெற்றிப்பட ஏகி-ஒரேதன்மையாகச் சென்று, என்றது விசை குறையாமல் ஒரேயளவான விசையுடன் சென்று, என்றபடி

யாம். ந: கழியினும்-கடந்தாலும். ச: அகத்திடப்பட்டு-உள்ளிடப்பட்டு. ரு: தெற்றென-தெளிவாக. கடவுளினியல்பைப் பற்றிக் கூறுகின்றுழி முதனூலாசிரியர் ஜாப் (Job) என்னும் முனிவரது கருத்தை எடுத்து மொழிந்தனராயினுங், காரைக் காலம்மையாரது கருத்தும் அவரது கருத்தைப்போலவே இருத்தலின், தமிழுக்கு ஏற்க அம்மையாரது திருப்பாட்டை மொழிபெயர்ப்பாசிரியர் இங்கே குறிப்பாராயினர்; அப்பாட்டின் பொழிப்புரை வருமாறு: "பெருமானே, தேவரீர் என்னை நுமக்கு அடிமையாகக் கொண்ட அந்நாளிலும் நுமது திருவுருவத்தைக் காணப்பெறுமலே நுமக்கு அடிமைப்பட்டேன்; அடிமைப்பட்டு நுமக்கு அணியளாய் நிற்கும் இந்நாளிலும் நுமது திருவுருவத்தைக் கண்ணுற் காணமாட்டாதேன் ஆயினேன்; எந்நாளிலாயினும் எவரேனும் என்னைத் தலைப்பட்டு 'நும் பெருமான் எவ்வகையான உருவம் உடையன்?' என்று வினவினராயின் அவர்க்கு யாது விடை சொல்வேன்! ஆதலால் நினது திருவுருவம் எவ்வுருவினது? அஃது யாது? அதனைக் கூறுவாயாக" என்றபடி; இதன் கருத்து என்னையென்றுற், கடவுள் எங்கும்நிறைந்த பொருளாகலின், அதனை ஓரிடத்தில் ஒருவடிவிற் காண்டல் இயலாதென்பதாம்; "எந்தையார் அவர் எவ்வகை யார்கொலோ" எனவும்*, "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணுதே" எனவும்† போந்த திருமொழிகளும் இக்கருத்துப்பற்றியே எழுந்தனவாம் என்பது. கக: பணி-தொழில், இறைவன் செய்யுந் தொழில்களாவன படைத்தல், காத்தல், அழித்தல் என்பன. உந: குழைந்து - உருகி; விளம்பினுர்-சொன்னுர். உஎ-உஅ: ஒருதலை-உறுதி.

பக். உக. ந: பயவா-கொடாத. சு: குறியாது-கருதாது. அ: திருவுளம்புற்றல்-உள்ளத்தில் அருளோடும் நினைத்தல், இச்

---

* திருஞானசம்பந்தர் தேவாரம், பொது, "வாழ்கவந்தணர்" பதிகம், ந. † அப்பர்தேவாரம், பொது, வினுவிடைத் திருத்தாண்டகம்.

13

சொற்றொடர், கடவுளிடத்தும் அவனருள்பெற்ற அடியாரிடத்தும் வழங்கப்படுவதாகும். ௧௨-௧௩: கடைக்கணிக்கின்றான்-கண்ணின் கடைசியாற் பார்த்து அருள்புரிகின்றான். ௧௪: இயலாமையால்-முடியாமையால்.



## முருகவேள் கனவிற்கண்ட துன்பமலை

(The Mountain of Miseries, a dream).

பக்கம், ௩௦. வரி, ௨: திரட்டி-சேர்த்து; ஒருதுறை-ஓர்இடம்; ஏற்றம்-உயர்வு. ௩: நிகராக-சமமாக. எ-அ: இவ்வரியிற் சான்றோர் ஒருவர் என்றது, கிரேக்கருட் பேரறிவினராய் வயங்கிய ஸாக்கிரட்டீஸ் (Socrates) என்பவரையேயாம்; ஏனை-மற்ற. இங்கே குறிப்பிடப்பட்ட மற்றையொரு சான்றோராவார் ஹொரேஸ் (Horace) என்பவரேயாவர். கக: நுகர்ச்சி-அனுபவம். கஎ: சாய்மானக்குறிச்சி - சாய்ந்தபடியாய் அமரும் நாற்காலி; நாற்காலியைக் 'குறிச்சி'என்பது பாண்டிநாட்டு வழக்கு. கஅ: அயர்ந்தது-தன்னை மறந்தது; கவிந்தது-மூடியது. ௩௦-ஆம்பக்கத்தின் கஅ-ஆம் வரியிலிருந்து ௩௨-ஆம் பக்கம் அ-ஆம்வரி முடிய வரும் அறக்கடவுளின் அரசிருக்கை மண்டப அமைப்பின் அழகுரை முதல்நூலில் உள்ளதன்று; இது மறைமலையடிகளே இயற்றிச் சேர்த்ததாகும். கக: சடுதியில்-திடுமென; புனிதம்-பரிசுத்தம், தூய்மை. ௨௦: என் முகமாய்-என்னை நோக்கி, யானிருக்கும் இடமாய். ௨௨:பசுங்கதிர் பொழியும்-பசிய ஒளியைச் சொரியும். ௨௩: அரசிருக்கை மண்டபம் - அரசன் ஐம்பெருங் குழுவும் எண்பேராயமுஞ் சூழ இருந்து, குடிமக்களின் முறையீடு கேட்டு அறம்புரியும் மண்டபம்; இதனை 'நாளோலக்க மண்டபம்' என்றுங் கூறுப.

பக். ௩௧. க-௨: முகடு-உச்சி; பொற்றகடுவேய்ந்து-பொன்னாற் செய்த இலைவடிவினால் மூடி. ச: வழுவழுப்பு-காலடிவைத்தால் வழுக்கும்படியான அத்துணை மேல்மட்டம். ரு: இழைத்த-தீவிய; 'சலவை' என்பது வண்ணனால் வெண்மையாக்கப்பட்டது; மிக வெண்மையான கருங்கல் 'சலவைக்கல்' லெனப்படும்; சலவைக் கற்களெல்லாம் பெரும்பாலும் வெண்ணிறத்தனவே யாயினும், அவற்றுட் சிறுபான்மைய கருநிறமு முடைமை

யால், அவற்றை நீக்குதற்கு ஈண்டு 'வெள்ளைச் சலவைக்கற்கள்' எனப் பிறிதினியைபு நீக்கும் அடையடுத்துவந்தது; பொருத்து வாய்-இரண்டுகற்கள் பொருத்தப்பட்ட நடுமூட்டு. சு: அழுத்துதல்-உட்செலுத்துதல்; பதித்தல்-உட்செலுத்துதலொடு செலுத்தப்பட்ட வற்றை ஒரு முறைப்படவைத்தல். எ: படங்கு-மேற்கட்டி. கூ: விடுபூ-கையாற் சிதறவிடப்பட்ட பூக்கள்; நாராற்றொடுக்கப் பட்டவை 'தொடுபூ' எனப்படும். கO. மணங் கமழ்ந்தன-நல்லவாசனை வீசின. கஉ: குயிற்றி-பதித்து. கங: அரியணை-சிங்காதனம், சிங்கத்தின்வடிவு தாங்கும் வகையாக அமைக்கப்படுதலின் இஃதிப்பெயர் பெற்றது. கரு: வறிதாய்-வெறுமையாய். கஅ: வைகறை - விடியற்காலை. உO: சங்கக்குழை-சங்கினாற் செய்யப்பட்ட குண்டலம்; துலங்கல்-விளங்கல். உக: முறுக்கு-புரி. உஉ: பொருப்பு-மலை. உச: பிறைக்கொழுந்து-பிறையாகிய கொழுந்து; நகும்-வெள்ளிய ஒளிவிரிக்கும்; பிறையாகிய பிள்ளை சிரிக்கும் என உரைப்பினுமாம்; சடைக்கற்றை-சடைத்தொகுதி. உரு: உரைவரம்பு-சொல்லின் அளவு; அமையாத-அடங்காத. உசு: அவரவர் செய்த நல்வினை தீவினைகட்கு ஏற்பத் துறக்க நிரயங்களைத் தரும் அறக்கடவுள், சிவபிரானுக்கு அடியவராய்ச், சிவபிரானேடொத்த திருவுருவம் உடையரென்பது நூல்களால் நுவலப்படுதலின், இங்கே அப்பெருமானுக்குரிய அடையாளங்களே இவர்க்குஞ் சொல்லப்பட்டன. முதல்நூலிற்போந்த ஜூபித்தர் (Jupiter) என்னுங் கடவுளுக்குரிய திருவடையாளங்களுஞ் சிவபிரான் திருவடையாளங்களோடு ஒத்தலின், பழையஉரோமர் வணங்கிய தெய்வமுஞ் சிவபிரானே போலும்! உஅ: அளப்பரிய-அளவிடுதல் கூடாத.

பக். கஉ. க: பணியாளர்-ஏவல் செய்வோர். ௩.: அச்சக்குறிப்பு-உள்ளத்தில் உண்டான அச்சம் உடம்பின்கட் புலப்படும் வகை; ஆங்காங்கு-அவ்வவ்விடத்தில். ச: நிறைகோல்-நிறுத்து அளக்குந் துலாம். ரு: கடுநிலைவழாது-நியாயந் தவறாது. சு: பாங்கு-தகைமை. ஈண்டுக் கூறப்பட்ட அறக்கடவுளின் திருவடையாளங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உண்மைப்பொருளை

அடக்கிநிற்றல் அறிந்தார்வாய்க் கேட்டுணர்க. கக: ஆடவர்-ஆண்மக்கள். கஉ: உது-எதிரிற்றோன்றும் இடம். கங: கட்டளை-உத்தரவு; வரைந்து வைத்தல்—இதற்கென்று பிரித்துத் தனி வைத்தல். கசு—கஎ: பொட்டைத்திடல் — மரஞ் செடி கொடி மலை முதலான எதொரு பொருளும் இல்லாத வெறு நிலப் பரப்பு. கஅ: குழுமி—கூடி. உO: போந்த—வந்த. உஉ: முகில்-மேகம்; ஊடுருவி—நடுநுழைந்து. உஅ: 'பெருக்கக்கண்ணாடி' சிறிய பொருள்களைப் பெரியவாய்க்காட்டும் ஒருவகைக் கண்ணாடி, (microscope).

பக். ௩௩. ச: கோளாறு-குழப்பம், விகாரம். ரு: வெருவுதல்—திடுமென அஞ்சுதல். சு. 'வீண்எண்ணம்' என்பது ஒரு பெண்மகளாக உருவகப்படுத்தப்பட்டமையின், அவ் வீண்எண்ணத்திற்குரிய இயல்புகள் எல்லாம், அப் பெண்ணினிடத்துள்ள பொருள்களாகவுந் தன்மைகளாகவும் உருவகப்படுத்தப்பட்டமை காண்க. அ: கிளர்ச்சி—மனஎழுச்சி; பொதிந்து-உள்ளிட்டுக்கட்டி. கங: பொறை-பாரம்; கதறுதல்-வாய்விட்டு அலறுதல். உO: பொதி-மூட்டை; உன்னிப்பு-கவனம். உஉ: வறுமை-தரித்திரம், இல்லாமை. உங: செருக்கு-அகங்காரம். உரு: மனைக்கிழத்தி-இல்லத்திற்கு உரியாள், என்றது மனைவியை. உஎ: கணை-அம்பு.

பக். ௩ச. க: 'காதல்' என்பது இளஞராயுள்ள ஆடவர்க்கும் மகளிர்க்கும் இடைநிகழும் போன்பு. சு: நெட்டுயிர்ப்பு-பெருமூச்சு. கக-கஉ: பெருமுதுமகளிர்-பெரிதுமுதிர்ந்த பெண்டிர்; திரைந்த-சுருங்கிய. கசு: கறை-கறள், பல்மேல் ஏறிய அழுக்கு. கக: விரவி-கலந்து. உO: இறும்பூது-வியப்பு, அதிசயம். உசு: பரிய-பருத்த; முரிப்பு-எருத்துமாட்டின் பிடரியண்டையுள்ள சதைப்பொதிபோல்வது; தசை—சதை.

பக். ௩ரு. கக: மடமை-பேர் அறியாமை; பொல்லாங்கு-தீங்கு. கச-கரு: கொந்தளிக்கும்-மும்முரப்படும்; விழைவு-இச்சை, மிகுந்த விருப்பம், passion; மனச்சாய்வு-ஆராய்வின்றி ஒன்றனைப்பற்றுதல், predisposition; மன நொய்ம்மை-மனவுறுதி இல்லாமை, frailty. கஎ: இழைத்த-செய்த. கஅ: காவாலி-நன்னடையைக் கருதாதவன், a profligate fellow. உஉ: தெற்

றென-தெளிவாக; அவற்கு-அவனுக்கு; 'அவர்க்கு' என்பதற்கும் 'அவற்கு' என்பதற்கும் உள்ள வேறுபாடு கருத்திற்பதிக்கற்பாலது; முன்னையது பலர் பால், 'அவருக்கு' எனப்பொருள் படும்; பின்னையது ஆண்பால், 'அவனுக்கு' எனப்பொருள் படும், உ௩: பட்டிமகன்-குறும்பன், ஊர்சுற்றி, a rogue. உ௫: நாண்தகைமை-தீயனசெய்தற்கு மனங்கூசுதல்.

பக். ௩௬. க: சூர் அணங்கு-அச்சத்தால் வருத்துந் தெய்வப் பெண்; சூர், அணங்கு என்னும் இருசொற்களும் பெரும்பாலும் ஒரு பொருள் மேலன; தன்னந்தனி-மிக்க தனிமை. ௩: மனத்தடுமாற்றம்-மனக்கலக்கம். அ: மருண்டேன்-வெருண்டேன். கக: 'முகமூடி' யென்பது முகத்தின் வடிவாகச்செய்த ஒரு படல், சில விளையாட்டுக் காலங்களில் இத்தகைய படலை முகத்தின்மேலணிந்து முகத்தை மறைத்தல் ஆங்கிலர்க்குள் ஒரு வழக்கம், இதனை mask என்பர். கஅ: வாய்மை-உண்மை. உக: உறுப்பு-அங்கம், அவயவம். உ௩: போகட்டமையால்-போக விட்டமையால், 'போகவிடு' என்பது சிதைந்து 'போகடு' எனவும், 'போடு' எனவும் வழங்கும். உஅ: விடுதி-விடுதலை.

பக். ௩எ. க: உவகை-களிப்பு; எய்தினேன்-அடைந்தேன். க0: குழம்பல்-அடி தலை மாறுதல். கஉ: அத்தாணிமண்டபம்-அரசிருக்கைமண்டபம். க௩: உவந்து-மகிழ்ந்து. உ௫: அலைசல்-இங்குமங்குமாக நடத்தல்; விரைசல்-விரைவு, சுருக்கு. உஎ: போற்றத்தக்க-வழுத்தத்தக்க.

பக். ௩அ. உ-௩: காணியாட்சி-நிலம்முதலான உரிமைப் பொருள்களை ஆளல்; உரிமை-சுதந்தரம், அல்லது உரிமைக்காரன், a heir. ௩: எடுப்புப்பிள்ளை-சுவீகாரபுத்திரன். ச: வெகுண்டு-கோபித்து. ௫: கடன்-கடமை. ௬: வெரு-சடுதியிற்றோன்றும் அச்சம். கஉ: பெயர்த்தும்-மறுபடியும். கச: இரந்து-கெஞ்சி. க௫: மறித்தும்-மறுபடியும். க௬-உ0: பொருத்துப் பிடிப்பு-மூட்டுகள் இளக்கமா யில்லாமல் விறைத்துப் போதல். உஉ: ஊதியம்-இலாபம். உ௩: நோக்குவார்-பார்ப்பவர். உஎ: பண்டமாற்று - ஒரு பொருளைக் கொடுத்துப் பிறிதொரு பொருளைக் கைக்கொள்ளல்.

பக். ௩௬. ௩: வாணிகம்—வியாபாரம், 'வாணிகம்' தமிழ்ச் சொல், 'வியாபாரம்' வடசொல். ௫-௬: சிற்றிடை - சிறுத்த இடுப்பு. ௧0: செய்துழி—செய்தவிடத்து. ௧௨: இடர்பயப்பது—துன்பந் தருவது. ௧௫-௧௬: ஒரு தலையாக—நிச்சயமாக; உழத்தல்-வருந்தல். ௧௭: அனையவும்-எல்லாம். ௨௧: நிலையிடுவதற்கு-தீர்மானஞ்செய்தற்கு; புகுதேன்-நுழையேன். ௨௨: மொழிந்த-சொல்லிய. ௨௩: இயில்-முரிப்பு, எருதின் பிடர்மேலுள்ள பொதித்தசை. ௨௭: மகளிர்-பெண்மக்கள்.

பக். ௪0. ௨-௩: நெக்குடைந்தது-நெகிழ்ந்து உருகிற்று. ௫: விளம்பி-சொல்லி. ௭: துணையானே-அளவானே. ௮: கோணங்கி-வளைந்த வடிவமுடையோன், அல்லது வளைந்தாடுவோன். ௧௧: அன்னோ-ஐயோ; பகடி-பரிகாசம். ௧௭: மேல் இதழ்—மேலுதடு. ௧௮: தெற்றுப்பட்டது-தட்டுப்பட்டது; முட்டியது. ௨௩: ஏளனம்-பரிகாசம்.

பக். ௪௧. ௧௨: தீவிய-தித்திப்பான. ௧௩: குப்பி-வயிறு பெருத்து வாய் சிறுத்த ஒருவகைப் பாண்டம். ௧௫: கடைப்படி-கடைசி. ௨௧: முறையீடு-தமக்குள்ள குறையினைக்கூறுதல். ௨௪: ஈந்தருளுதல்-கொடுத்து அருள் செய்தல், உயர்ந்தோர் தாழ்ந்தோர்க்குக் கொடுத்தலை ஈதல் என்ப. ௨௬: உய்க்கும்படி-கொண்டு வந்து சேர்க்கும்படி. ௨௭: கதுமென-சுருக்கென.

பக். ௪௨. ௫-௬: ஒழுகலாறு-நடக்கைவகை; நேர்மை-செவ்வை, steadiness. ௮-௯: மான் மருட்டும் விழி-தன் அழகினால் மானையும் மருளச்செய்யுங் கண். ௧0: புல்லிப்பார்த்தல்-தழுவிப்பார்த்தல். ௧௫: பருமன்-பருத்த அளவு. ௧௮: ஏற்றபடி-இசைந்தபடி; நுகர்ந்து-அனுபவித்து. ௨௨: சான்ற-மிகுந்த; சொல்லுறுதி-நன்மை பயக்குஞ்சொல், உறுதிச்சொல் என்பது முன் பின்னாய் நிலை மாறியது; வழிப்பட்டு-உட்பட்டு; ஒழுக-நடக்க. ௨௩: நன்னெறித்திறங்கள்-நல் நடையின் வகைகள்.

பக். ௪௩. ௧: மனம் அழுங்கல்-மனம் வருந்தல். ௩: வலாமை-இயலாமை, கூடாமை. ௪: கடைப்பிடித்து-உறுதியாய்ப்பிடித்து.

---

# மராடன் கண்ட காட்சி

## (The Vision of Marraton)

இக்கட்டுரை முழுதும் அடிசன் ஆங்கிலத்தில் எழுதியபடியே பெரும்பாலும் மொழிபெயர்த் துரைக்கப்படுகின்றது. இடையிடையே முதனூலிலில்லாத சில வேறுபாடுகளும் உண்டு.

பக். ௬௬. வரி ௧௩: இம்மை யுலகு-இப் பிறப்பிற் குரிய உலகு. ௧௪: மறுமையுலகு-இறந்தபின் அடையும் மேலுலகு. ௧௫: கையாளும்பொருட்டு-எடுத்து வழங்கும்பொருட்டு. ௧௯. சவம்-பிணம். ௨0: 'சங்கரமதம்' என்பது கி-பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்த சங்கராசாரியாரால் நாட்டப்பட்ட கொள்கை; எண்ணமே உலகமாய்க் காணப்படுகின்ற தல்லாமல், எண்ணத்தின் வேறாய் உலகம் என்பதொரு தனிப்பொருள் இல்லையென்றுங், கடவுளெனவும் உயிரெனவும் இருபொருள் இல்லை, கடவுளே அறியாமையாற் பற்றப்பட்டு உயிர்களாய்த் தோன்றுகின்ற தென்றுந், தன்னைக் கடவுளாக நினைதலே வீடுபேறுகுமல்லது உயிர் கடவுளைச் சென்று தலைக்கூடுதல் அஃதாகாதென்றுஞ் சங்கராசாரியார் தாம் இயற்றிய வேதாந்த சூத்திர வுரையிலே கூறினர். இவர்க்கு முன் இருந்த பௌத்த மதத்தினரில் ஒரு பிரிவினரான சௌத்திராந்திக பௌத்தர் கொள்கைகளையே சங்கராசாரியாருங் கைக்கொண்டமையால் இவரது மதம் 'பிரசிந்நபௌத்தம்' அல்லது 'மறைந்த பௌத்தம்' எனவும் வழங்கப்படும்; இனி, அப் பௌத்தமதம் 'மாயாவாதம்' எனவும் பண்டைநாளிற் பெயர் பெற்றமையால், அதனோடொப்பதாகிய சங்கராசாரியார் கொள்கையும் பின்றைநாளில் 'மாயாவாதம்' எனப் பெயர்பெறலாயிற்று. முதல் நூலிற் சொல்லப்பட்ட மாயாவாதக் கொள்கை ப்ளேடோ (Plato) என்னுங் கிரேக்க அறிஞரதாகும்; இவர் கிறித்து பிறப்பதற்கு முன் ஐந்தாம் நூற்றாண்டிலும் நான்காம் நூற்றாண்டிலும் இருந்தவர்.

௨௩: 'பாற்கரியமதம்' என்பது பால்தயிரானாற்போலக் கடவுளே உலகும் உயிருமாகத் திரிந்ததென்றுரைப்பது. பாஸ்கரர் என்பவரால் இக் கொள்கை நாட்டப்பட்டது பற்றி இது பாஸ்காமதம் எனப்பட்டது; இதனைப் 'பரிணாமவாதம்' என்றும் வழங்குவர்; இம்மதத்தின் இயல்பினையும், மேற்காட்டிய மாயாவாதத்தினியல்பினையுஞ் சிவஞானசித்தியார் பரபக்கத்திற் கண்டுகொள்க.

பக். ௪௫. வரி ௩: எடுத்துக்காட்டு-உதாரணம்; 'காந்தக்கல்' இரும்பைத் தன் மாட்டு இழுப்பது. ௪: உரையில்-கட்டுரையில். ௫: ஆற்றல்-வலிமை. ௬: நிலை நிறுத்துவான் புகுந்து-நிலையிடுதற்குப் புகுந்து. ௧௨: இங்ஙனங்கூறினவர் ஆல்பர்டஸ் மாக்னஸ் (Albertus magnus) ௨௫: உசாவி-கேட்டு. ௨௬: மொழி பெயர்ப்பாளன்-ஒருமொழியிற் சொன்னவைகளை மற்றொரு மொழியில் விளக்கிச் சொல்வோன். ௨௭: ஏவினான்-தூண்டினான். ௨௮: வினா-கேள்வி.

பக். ௪௬. வரி ௪: குடைவு-வளைவு. ௯: பிணைந்தது-கலந்தது; அடர்ந்த-நெருங்கின. ௧௧-௧௨: சுவடு - அடி அழுந்தின அடையாளம்; ஒற்றடிப்பட்டம்-ஒற்றை ஆள்மட்டும் செல்லத்தக்க வழி; 'ஒன்றுஅடி' ஒற்றடிஎன வலித்தது. ௧௬: கோளரி-ஆண்சிங்கம். ௧௯: போழ்து-பொழுது. படைக்கலம்-ஆயுதம். ௨௧: பற்றுகையில்-பிடிக்கையில்.

பக். ௪௭. ௩: அலைசல்-நெருக்கமாய் இல்லாமை, இடையிடையே வெளிகள் உண்மை. ௫: முன்னினான்-எண்ணினான்; புதல்-குற்றுச்செடி. ௧௧: பிறிது-வேறு. ௧௨: பம்பிய-நெருங்கி வளர்ந்த; குறுங்காடு-குறிய மரங்கள் செடிகள் உள்ளகாடு; அகத்தே-உள்ளே. ௧௩: அரண்-காவற் கோட்டை, மதில்; கோலிய-வளைத்த. ௧௫: ஊன்-இறைச்சி, தசை; குருதி-இரத்தம். ௨௧: தீவியமணம்கமழும்-இனிய நாற்றம் மணக்கும்; தென்றற் காற்று-தென்பக்கத்தே பொதியமலையிலிருந்து வரும் மெல்லிய இனியகாற்று; அமெரிக்காவுக்கு இத்தென்னாட்டிலிருந்து செல்லுந் தென்றற் காற்று இல்லையாயினும், இங்குவீசுந் தென்

றற்காற்றோடொப்பது அங்கும் உண்டாகலின் அதனை இப்பெய ராற் கூறினார். ௨௪: நறுமணம்-நல்லமணம்.

பக். ௪௮. வரி ௪: வயவர்-வீரர்; கடுகி-மிகவிரைந்து. ௨0: மிடைந்த-நெருங்கிய. ௨௧: ஓடுகால்-நீர் ஓடுங் கால்வாய்; கதிரவன்-சூரியன், பகலவன். ௨௫: உவப்பு-மகிழ்ச்சி. ௨௭-௨௮: விளையாட்டு அயர்தல்-விளையாடுதலைச் செய்தல்; உறைந்து-வசித்து.

பக். ௪௯. வரி ௩: சில்-வட்டச் சிறு தகடு. ௩: தறி-கோல், கத்தியால் தறிக்கப் பட்டமையின் தறியெனப்பட்டது. ௬: புரிவதில்-செய்வதில். ௧௪: எஞ்ஞான்றும்-எந் நாளிலும். ௧௬: அவாவினன்-விரும்பினன், ஆசைகொண்டான்.

பக். ௫0. வரி ௨: காதற்கிழமை-பேரன்பின் உரிமை. ௩: திண்ணிதாக-உறுதியாக; பிணிக்கப்பட்ட-கட்டப்பட்ட. ௫: வதுவை-கலியாணம், மணம். ௬: 'அருத்தில்லை' எனத்தமிழில் திரிக்கப்பட்டபெயர் முதல்நூலில் Yaratilda என்றுஉளது. ௮: பகர்வது-சொல்வது.

பக். ௫௧. வரி ௫: பருஉடம்பு-தூலசரீரம், ஊன் உடம்பு; பொறை-சுமை. ௭: அளவளாவியபின்னர்-மனங் கலந்திருந்த பின். ௮-௯: மலிந்த-நிறைந்த; ஒப்பனை-அலங்காரம். ௧௧: மனக்கற்பனை - மனத்தாற் கற்பித்துக்கொள்ளப்பட்டது, பாவனை, imagination. ௧௪: உறையுள் - இருப்பிடம், வீடு. ௨௧: கொணர்ந்து-கொண்டுவந்து. ௨௬: மகார்-சிறுகுழந்தைகள்.

பக். ௫௨. வரி ௫: கவரும்பொருட்டு-பறித்துக் கொள்ளும் பொருட்டு.

---

## முருகவேள் கனவிற்கண்ட ஓவியச்சாலை

## (The Picture Gallery, a dream)

பக். ௫௩. ஓவியச்சாலை-சித்திரபடங்கள் எழுதும் இடமும் அவை வைக்கப்பட்டிருக்கும் இடமுமாகும்.

இக் கட்டுரையும் பெரும்பாலும் முதல்நூலில் உள்ள படியே யெடுத்து மொழிபெயர்த் துரைக்கப்படுகின்றது.

வரி ௮: ஊதைக்காற்று-குளிர்காற்று. ௧௦: தீட்டிய-சித்திரித்த, வரைந்த. ௧௨: முகில்-மேகம். ௧௭-௧௮: மகிழ்-மகிழ்ச்சி; பயவா-தராத; கார்காலம் - மழைகாலம்; துயரம் - துன்பம்; கலைத்து-குலைத்து. ௨௦: மினுக்கிட்டு-ஒளியால் மின்னுமாறு செய்து.

பக். ௫௪. வரி ௧: கிழமை-வாரம். ௨: அடுத்தடுத்து-அடிக்கடி; ஈடுபடல்-மனம்பதிந்து நிற்றல். ௫: முடிய-முற்ற. ௮: கூடம்-கூடியஇடம்,சூழப் பல அறைகளை யுடைத்தாய் ஒருபால் இட[redacted]மனைப்பகுதி; இதுவும் வடமொழியிற்சென்று வழங்கும் ஒரு தமிழ்ச்சொல். ௧௩: நிரல்பட-வரிசையாக. ௧௫: கோலுதல்-வளைத்தெழுதல். ௨௬: நூனெழி-நாடா; பிணித்து-கட்டி. ௨௭: ஆடவன்-ஆண்மகன். ௨௮: அகவை-வயது.

பக். ௫௫. வரி ௨: புன்முறுவல்-புன்சிரிப்பு. ௪: சூழ்ச்சித்துணைவர்-ஆலோசனை சொல்வோர். Privy-counsellors. ௫: எக்களிப்பு-மிக்கமகிழ்ச்சி. ௬: பிலுக்கு-பகட்டு. ௭: பசப்புக்காரி-மயக்குவோள். ௯: தொங்கல் ஆடைகள்-தொங்கவிட்ட துணிகள். ௧௦: ஏற்றன-இசைந்தன. ௧௧: பகட்டான-மினுக்குள்ள: ௧௨: குழைத்து-ஒன்றாய்க் கலந்து, மசித்து. ௧௯: படி-ஒன்றைப் போல் எழுதப்படுவது. ௨௨: உடை-உடுப்பு. ௨௫: கோமாளி-நகைவிளைப்போன். ௨௮: துகிலிகை-எழுதுகோல்.

பக். ௫௬. வரி ௧-௨: வெருக்கொள்ளுதல்-திடுமென அச்சங் கொள்ளுதல். ௧௫: துப்புரவு-சுத்தம். ௧௮: பேரவா-பேராசை. ௨௬: மரக்கலம்-கப்பல்.

பக். ருஎ. வரி ரு: சடுதியில்-திடீரென. எ: துலங்கின-ஒளிர்ந்தன. க0: உன்னிக்கற் பாலர்-கவனித்தற்கு உரியர். கக: ஆங்கு-அவ்விடம். கஎ: இயல்-சாயல், ஒழுங்கு. உச: அழுக்காறு-பொறாமை. உஎ: பரும்படியாய்-மேம்படியாய், நுணுக்கமின்றி.

பக். ருஅ. இரவேல் (Raphael), திஷன் (Titian), குவீடோரேனி (Guido Rheni), ஆனிபல் காரச்சி (Hannibal Carrache), கோரெடுசோ (Coreggio), உரூவன் (Rubens). முதலியோர் ஐரோப்பியநாட்டில் ஓவியம் எழுதுதலில் மிக வல்லுநராய்ப் புகழோங்கி நின்றோராவர்.

பக். ருகூ. வரி சு: நொய்தாய்-மெல்லிதாய். க0: ஓவாது-ஒழியாது. கக: இடையறாது-நடுவே ஒழிவுபெறாது. கஉ: இணக்கமில்லா-பொருத்தமில்லாத. கச: தூய்து - சுத்தம். கரு: 'நிழலோட்டம்' என்பது இயற்கையிற் காணப்படும் ஒரு தோற்றத்தைப் போல் வரையுங்கால், அத்தோற்றத்தில் ஒளிபடும் பகுதியும் நிழல்படும் பகுதியுங் காட்டிஎழுதுதல் ஓவியம் எழுதுதலிற் கைதேர்ந்தார் எல்லாரிடத்துங் காணப்படும். அங்ஙனம் நிழல்படும் பகுதியை வரையுமிடத்தும், அந்நிழல் வரவரத் தன் கருமைகுறைந்து ஒளியுடன் கலக்குமாறெழுதும் [illegible]யும் அவர் மாட்டுக் காணப்படும். இவ்வாறெல்லாம் ஓவியங்களில் நிழல்ஓடும் வகைகளைக் காட்டுவதே 'நிழலோட்டம்' எனப்படும். கசு-கஎ: நிறம் ஊட்டுதல்-நிறம் கொடுத்தல்; வண்ணங்களை ஆற்றி முதிரச்செய்தல்-சாயங்களைச் சாயங்களென்றே தெரியாமல் இயற்கைப் பொருள்களிற் காணும் நிறத்தோடு ஒப்பத் தணிவுசெய்து, அங்ஙனந் தணிவுசெய்யினும் அந்நிறம் ஒளி முதிர்ந்து தோன்றுமாறு செய்தல். உஉ: குஞ்சி-ஆண்முடிமயிர். உச: தொடர்பு-தொடர்ச்சி.



# பேய்களும் ஆவிகளும்

## (On Ghosts and Apparitions)



இக்கட்டுரையும் அடிகளார் எழுதியபடியே பெரும்பான்மையும் மொழிபெயர்த் துரைக்கப்பட்ட தாயினும், அவ்வுரை முகத்திற் சொல்லப்பட்ட இடிந்து பாழாய்ப்போன ஒரு கிறித்துவகுருவின் மடத்திற்கு ஈடாக, அதனோடொப்ப மதுரைக்கு அருகாமையிலுள்ள அழகர்மலைப் பக்கத்தில் இடிந்து பாழாய்க்கிடக்குங் கோட்டையினிடம் ஏற்பவைத் துரைக்கப் படுகின்றது. அங்ஙனமே விவிலியநூலில் உள்ள பண்களுக்கு (Psalms) ஈடாக அவைபோலுந் திருவாசகம் ஏற்கவைத் துரைக்கப்பட்டது.

பக். ௬௦. வரி ௪-௫: அண்டங்காக்கை-காக்கையிற் பெரிய இனம்; கரைவது-கூவி அழைப்பது. ௧௦: முறை-புத்தகம். தன்னை [redacted]யழைத்த இளைய அண்டங்காக்கைகட்கு இறைவன் இரைதந்தானென்று விவிலியநூற்பண்ணிற் சொல்லப்பட்டதனை (Psalms, 147, 9) அடிகளார் தம் முறையுள் எடுத்து மொழிந்தமையின், அதனோடொப்பக் கருங்குருவிக்குச் சிவபிரான் அருள்புரிந்தமை எடுத்துக்காட்டப்பட்டது; "கருங்குருவிக்கன்று அருளினைபோற்றி" என்று மாணிக்கவாசகப் பெருமானும் அருளிச்செய்தார்*; இதன்வரலாற்றினைப் பெரும்பற்றப்புலியூர் நம்பியார் இயற்றிய 'திருவாலவாயுடையார் புராணத்' திற்† கண்டுகொள்க. அழகர்மலை யடிவாரத்தில் இடிந்து கிடக்குங் கோட்டையைச்சாரத் திருமால் கோயில் ஒன்று தனித்து உளது. ௧௬: இயங்குதல்-நடமாடுதல்.

பக். ௬௧. வரி ௧: குழைந்த-வாடிய. ௨: கிட்டத்தட்ட-ஏறக் குறைய. ௪: அச்சுறுத்தல்-அஞ்சச்செய்தல். ௫: திங்கள்-மாதம்.

---

* திருவாசகம், போற்றித்திருவகவல், ௨௦௬. † ௬௦.

எ: பணிப்பெண்-குற்றேவல் செய்வோள். கூ-க0: வற்புறுத்தல்-உறுதிப்படுத்திச் சொல்லல். கக: ஆண்டு-வருஷம். கஎ: தளவாடங்கள்-தட்டுமுட்டுகள். உ0: மசங்கல்மாலை-இருள்மயங்கிய மாலைக்காலம்; போதரா-வெளியேவாராத. உக: வைகின-தங்கின. உஉ: முகடு-உச்சி. உ௫: 'எதிரொலி' என்பது ஓரிடத்துண்டாய ஒலி அவ்விடத்தைக் கடந்து அப்பாற் செல்லாவாறு மலைகளேனுஞ் சுவர்களேனுந் தடையாய் நின்றால், அஃது அத்தடைமேற்றாக்குண்டு மீளவும் முன்போல் ஒலிப்பதேயாகும். உஅ: 'ஓ' என்பது ஏதோர் ஓசையுமின்றி அமைதியாய் இருக்குமிடத்திற் றோன்றும் ஓ என்னும் மெல்லியபரந்தவொலி.

பக். கூஉ. வரி ச: வெருட்சி-திடுமெனத்தோன்றும் அச்சம். க0-கக: இலாகவர் (Locke); அறிவுநூல் - ஞானநூல்; 'நினைவுகளின் கூட்டுறவு' என்பது (The Association of ideas) ஒரு நினைவு மற்றைப் பலநினைவுகளொடு தொடர்புபட்டு நிற்றல்; இங்ஙனம் நிற்றலால் ஒரு நினைவு உள்ளத்திற் றோன்றிய வளவானே அது தன்னோடு ஏதேனும் ஒருவாற்றால் இயைபுடைய மற்றொரு நினைவினையும், அம்மற்றொன்று அங்ஙனமே பிறிதொன்றனையுமாக இவ்வாறு உள்ளத்தில் ஒரு வரிசையாகப் பல நினைவுகளையும் அடுத்தடுத்து எழுப்பாநிற்கும்; இயல்-அத்தியாயம். கங: சொற்பயிற்சி-சொல்லின்பழக்கம். க௫: ஒவ்வாத-ஒப்புமைஇல்லாத. கஅ: கூளி-பூதம். உஉ: பேதைப்பெண்-அறிவில்லாப் பெண்.

பக். கூங. வரி ௫: நிகழ்ச்சிகள்-சம்பவங்கள். எ: சேய்மை-தூரம்; ஆ-பசு. கூ: உள்ளப்பாங்கு-மனத்தகைமை. கக-கஉ: இத்தகைய - இத் தன்மையவான; புல்லிய-அற்பமான. உ0: நடை - ஒருவீட்டினுள் இருபுறத்தும் உள்ள அறைகளுக்கு இடையேயுள்ள கடவை, a gallery. உஎ: தறைதல்-ஆணியால் இறுக்கல்.

பக். கூச. வரி க: அரைவாசி-அரைப்பங்கு. ச: உறைவிடம்-குடியிருப்பு; அத்துணை-அவ்வளவு. கூ: புறம்படுத்தல்-வெளிப்படுத்தல். எ: உயிர்துறந்த-உயிர்நீங்கிய; பரக்க-விரிய. கக: அரசுவீற்றிருந்த - தலைமையாய் அமர்ந்திருந்த. கங: எங்கணும்-எவ்

விடத்தும். கசு: கடவுள்நேயம் - இறைவனிடத்து வைக்கும் அன்பு, ஈசுவரபக்தி. கஎ: வரலாற்றுநூல்-சரித்திரநூல். கஅ: தெரிப்பன-அறிவிப்பன. ககூ: தொன்று தொட்டு-பழமைக் காலந் தொட்டு. உக: பொய்க்கட்டு-பொய்யாகக் கட்டிவிட்டது; அடிப்படை-அத்திவாரம்; அற்றது-இல்லாதது. உஉ: எழூஉம்-எழுகின்ற. உரு: மன்பதைகள்-மக்கட்கூட்டத்தார், nations; பொதுச் சான்று-பொதுவான சாட்சி. உசு: இணங்க-இசைய. உஅ: குறிப்பாளிகள்-குறிப்பான ஆட்கள்.

பக். சுரு. வரி ங: செந்நாப்புலவர்-செவ்வியசெய்யுட்களைப் பாடுதலிற் றேர்ந்த நாவினையுடைய பாவலர். ரு: உலுக்கிரீசியர் (Lucretious) என்பார் கிறித்து பிறப்பதற்கு முன்னூற்றாண்டில் உரோமநகரில் இருந்த ஒருபெரும்புலவர் ஆவர். சு: போக்கு-போம்வகை. க0: ஐயம் அற-சந்தேகம்இல்லையாம்படி. கஉ: எலாவாறு - முடியாதவகையாய். கச—கசு: கட்புலனாற் காணப்படும் நமது பருஉடம்பு வெங்காயச் சருகுபோல் ஒன்றனுள்ஒன்றாய்ப் பொதிந்த வேறு நான்குஉடம்புகளொடு கூடியிருத்தலும், அ[redacted]கள் ஒன்றினொன்று நுண்ணியவாய் இருத்தலும் மறைமலையடிகள் இயற்றிய 'இறந்தபின் இருக்கும்நிலை' என்னும் நூலிலும், 'சைவசித்தாந்த ஞானபோதம்' என்னும் நூலில் உள்ள 'சிவராசயோகம்' என்னும் உரையினும் நன்கு விளக்கப் பட்டிருக்கின்றன. உங: மாந்தர்-மக்கள்; சாயல்-நிழல் போல்வதொரு நுண்ணியவடிவு.

பக். சுசு. வரி உ: பொதிந்துவைத்த-மறைத்துவைத்த, திணித்துவைத்த; நன்னெறிக்குறிப்பு-நன்னடையைப்பற்றிய கருத்துகள். இங்கெடுத்துக்காட்டப்படுஞ் சிறுகதை முதனூலாசிரியரால், ஜோசேப்பஸ் (Josephus) என்னுங் கிரேக்க ஆசிரியரது நூலினின்றும் எடுத்துக் காட்டப்பட்டதாகும். ச: ஈண்டு-இவ்விடத்தில். சு: 'அருக்கன்' என்னும் பெயர் முதல்நூலில் உள்ள Archilaus என்னும் பெயரோடும், 'கிளிமொழி' என்பது Glaphyra என்னும் பெயரோடும் ஓசையொப்பனவாக வைக்கப் பட்டன. அ: பின்றை-பிறகு. கசு: உருக்கம்-உள்ளக்கசிவு. ககூ:

கடிந்து-சினந்து. உக: முதுமொழி-பழமொழி, மூதறிவினர் கூறியமொழி. உஉ: குமரி-கன்னி.

பக். சுஎ. வரி க: திறம்-மேன்மை, வலிமை. உ: நாடி-விரும்பி. சு: ஒவ்வாதது-பொருந்தாதது. கரு: பயில-பழக; மன எழுச்சி-மனக்கிளர்ச்சி. கசு: நம்பகம்-நம்பிக்கை, நம்பு என்னுந் தமிழ்உரிச்சொல்லிற் பிறந்தது இச்சொல்; "நம்பு மேவு நசையா கும்மே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்*; சிதைத்தல்-அழித்தல். கஎ: கடவர்-கடமையுடையர்.

முற்றும்